# BALA SANYASINI

OR

# MANIMEKHALAI

---

## WHAT IS GOD BUT LOVE!

The Boast of Heraldry, the pomp of power
Await alike the inevitable hour
Religion, (which is but truth and Ahimsa)
Is alone eternal and real.

## MANIMEKHALAI

Leads the world to that Path.
Witness the immortal lesson unfolding on the screen.

## SYNOPSIS.

Mysterious are the ways of the Almighty. Incidents trivial in themselves shape ones destiny. Born as the daughter of Madhavi, a Devadasi, the unsophisticated MANIMEKHALAI took life to be one glorious song. But like Lord Buddha she discovers one fine morning that



things are not what they seem. The saving of the dove, wounded by the hunter's arrow, through the intervention of a Buddha Bikshu, opens her eyes. She realises that happiness as commonly understood is a mirage. True happiness lies in following the tenets of Buddha, viz., divine love and ahimsa.

Spurning the advances of the Chola Prince, Udayakumar and the lure of pleasure held out by her grand-mother, Manimekhalai with the aid of the Goddess Manimekhalai obtains the never-emptying AKSHAYA PATRAM and starts poor feeding on a large scale.

The Prince blind with passion follows the girl like a leach and was ultimately murdered by the husband of Kayachandikai by a mistake. Charged with the murder of the Prince and after being molested by the enraged and bereaved Queen, Manimekhalai was in the end released by the repentent King and Queen after witnessing her spirituai greatness.

The path was at last clear. Saint Aravana Adigal, the head of a Buddhistic monastery initiated her into the sacred order of "Buddha Bikshunis".



Life is a festival only to the wise. Manimekhalai was wise and so she took the right path. She endevoured and reached self-realisation the highest aim of all religions, whether it is Buddhism, Hinduism, Mohammadanism or Christianity and thereby manifesting to the world that lowly birth is no bar to spiritual salvation.

---







## பாலசந்நியாசினி

அல்லது

# மணிமேகலை

---

கதை சுருக்கம்

---

**அன்பே தர்மம் !**

உலக மதங்கள் அனைத்தும் ஒரே தேவனையே
வழிபடுகின்றன கண்ணனின் கீதையும் அதுவே !
அதுவே 'அஹிம்ஸா பரமோதர்மம்' எனப்படுவது.

**" மணிமேகலை "**

அந்த தர்ம வழியை உலகுக்குக் காட்டுகிறது
அவற்றை வெள்ளித் திரையில் காணுங்கள் !

---

காவிரிப்பூம் பட்டிணத்தில் திருக்கடையூர் மாதவியின் மகள் மணிமேகலை, தன் தோழிகளுடன் ஒரு நாள் தோட்டத்தில் விளையாடிக்கொண்டிருக்கையில் ஒரு வேடன் அம்பால் அடிபட்ட ஒரு புரு அவள் முன் விழுகிறது. அதை அவள் கையிலெடுத்தவுடன் அதையடித்த வேடன் அதைப் பெறுவதற்காக ஓடி வருகிறான். அதே சமயம் ஒரு புத்த சன்யாசியும் அங்கே வந்து "அதை அவனிடம் கொடுத்துவிடாதே" என்று தடுத்து மணிமேகலைக்கு ஜீவஹிம்ஸையின் கொடுமையையும், ஜீவசேவையின்பத்தையும் விளக்கிக் காட்டி, புத்தர் பெருமானின் கருணை மதத்தைப் பற்றியும் சொல்லுகிறார்.



குழந்தை மனதுடன் ஆடல் பாடல்களில் லயித்திருந்த மணிமேகலையின் இளநெஞ்சத்தில் அந்தச்சம்பவம் ஒருபெரிய கிளர்ச்சி செய்துவிடுகிறது. தானும் புத்த சங்கத்தில் சேர்ந்து அஹிம்ஸை மதத்தை ஜனங்களிடம் பரப்பவேண்டுமென்று முடிவு செய்கிறாள். ஒருநாள் அவள் தன் தோழி சுதமதியுடன் மலர் கொய்வதற்காக உபவனம் என்ற பூங்காவிற்குப் போனபோது, சோழநாட்டு இளவரசன் உதயகுமாரன் அவளைக் கண்டு காதல் கொள்கிறான். ஆனால் மணிமேகலையை நேரில் கண்டு பேசக்கூட முடியாமல் திரும்புகிறான்.

பூக்கொய்துகொண்டு திரும்பிய மணிமேகலையும், தோழியும் மணிமேகலா என்னும் தெய்வத்தினால் நகரத்து ஸ்மசானமான சக்ரவாளத் தோட்டத்திற்கு அனுப்பப்படுகிறார்கள். பொழுதாகி விட்டதால் இருவரும் அங்கேயே இரவைக் கழிக்க முடிவு செய்கிறார்கள். நடு இரவில் மணிமேகலா தெய்வம் தோன்றி மணிமேகலையைத் தூக்கிச் சென்று மணிபல்லவம் என்ற ஜன சஞ்சாரமற்ற தீவில் விட்டுவிடுகிறாள். அங்கு மணிமேகலை தன் பூர்வ ஜன்ம வரலாற்றைப்பற்றி அறிவதுடன், எந்த மனிதரும் கண்டிராத புத்த பீட தரிசனம் பெறுகிறாள். அதோடு எடுக்க எடுக்கக் குறையாமல் அமுது சுரக்கும் அக்ஷயபாத்திரமும் அவளுக்குக் கிடைக்கிறது. மணிமேகலா தேவி உபதேசித்த மந்திரத்தின் உதவியால் காவிரிப்பூம் பட்டிணம் போய்ச் சேருகிறாள். அங்கு புத்தமடத் தலைவர் அரவணடிகள் என்றபௌத்த பிக்ஷுவை தரிசித்து அவரிடமிருந்து ஞானபோதம் பெறுகிறாள்.

இளவரசன் உதயகுமாரனுக்காக, மணிமேகலை மனதை, உலக இன்பங்களில் திருப்ப முயல்கிறாள் அவள் பாட்டி சித்ராபதி,



ஆனால் மணிமேகலை தன் நகைகளை யெல்லாம் கழற்றி யெறிந்து அப்போதே சந்யாசினி வேடம் பூண்கிறாள். அந்த வேஷத்திலும் இளவரசன் அவளைப் பின்தொடர்ந்து தன்காதலைவெளியிடுகிறான், மணிமேகலை அவனைத் திருப்பி அனுப்பிவிடுகிறாள். ஆனால் அவன் மறுபடி வந்து தன்னைத் தொந்திரவு செய்யக் கூடுமென்று காய சண்டிகை யென்ற கந்தர்வ ஸ்த்ரீவேஷம் பூண்டு தன் அக்ஷய பாத்திரத்தைக் கொண்டு ஏழைகளுக்கு அமுது வழங்கி வருகிறாள்.

அந்த காய சண்டிகை என்பவள் சாபத்தினால் "யானைப்பசி" என்ற வியாதியை யடைந்து திரிந்தவள். மணிமேகலையின் அக்ஷய பாத்திர அமுதால் அந்த வியாதி தீர்ந்து சாப விமோசனம் பெற்றவள். அவள் கணவனான கந்தர்வன் அவளைத் தேடிக்கொண்டு வருகிறான். அப்போது தன் மனைவி வேஷத்திலிருக்கும் மணிமேகலையைக் கண்டு அவளே தன் மனைவி என்று எண்ணி விடுகிறான். அந்த சமயம் மாறுவேஷத்திலிருப்பது மணிமேகலைதான் என்று அறிந்துகொண்ட இளவரசன் அவளைத் தேடிவந்து பேசுகிறான். அதைக் கண்ட கந்தர்வன் தன் மனைவியே அப்படி இன்னொருவனுடன் தவறாக நடந்து கொள்வதாக எண்ணிவிடுகிறான். அவளைத் தண்டிக்க எண்ணிப் பின்பற்றி அவள் தங்கியிருக்கும் கோவிலில் போய் காத்திருக்கிறான். தெய்வச் செயலாக மணிமேகலையைத் தேடிவந்த இளவரசனை கந்தர்வன் கொன்றுவிடுகிறான். இளவரசன் இறந்ததற்கு மணிமேகலைதான் காரணமென்று சோழ மன்னன் அவளைச் சிறையிலிடுகிறான். மகன் இறந்ததற்காகப் பழிவாங்க எண்ணி சோழ அரசி ஒரு துன்மார்க்கனை மணிமேகலையிடம் அனுப்புகிறாள். ஆனால் அவளுடைய தூய ஆத்ம சக்தியால் அந்த துன்மார்க்கன் தோல்வியடைகிறான். சோழனும் அரசியும் அவளிடம் மன்னிப்புக் கோருகிறார்கள்.

அவர்களுக்கு நற்புத்தி போதித்து மணிமேகலை வஞ்சிமா நகருக்குச் சென்று கண்ணகி தேவியைச் சந்திக்கிறாள். சோழன்



இந்திரவிழா நடத்துவதில்லை யென்று முடிவுசெய்கிறான். அதனால் தெய்வகோபம் தோன்றி காவிரிப்பூம் பட்டிணம் சமுத்திரத்தால் அழிக்கப்படுகிறது.

வஞ்சிமா நகரிலிருந்து காஞ்சிபுரத்திற்கு வந்த மணிமேகலை, அங்கு புதிதாக புத்தமடம் ஸ்தாபித்திருந்த அரவண அடிகளைச் சந்தித்து புத்த சங்கத்தில் ஒரு பிக்ஷுணியாகச் சேர்ந்து அஹிம்ஸா தர்மப் பிரசாரம் செய்து முடிவில் புத்த பகவானின் அருள் பெறுகிறாள்.

---





**பாலசந்நியாசினி**

அல்லது

# ம ணி மே க லை

---

பாட்டுகள்

---

மணிமேகலை

என்ன சொல்வேன் மாநில அழகினை
இறைவன் அருளிய வாழ்வினி னிமையை(என்ன) 1

வானுயர் மாமலை ஆயிரமிங்கே
மணிகள் கரைபுரளும் நதிகளுமிங்கே—வெளி
காணாத தீங்கனி மலர் மரங்கள்—இதோ
காணீர் மனோகரச் சோலைகளும்—இளந்
தென்றல் தவழும் தடமே
தோகை மயில்கள் ஆடவுமின்னிசை
தீங்குயில் பாடவும் பரவசமாகும்
செவி விழிகள் பேரானந்தம் (என்ன)

மணிமேகலை

இராகம்—சரஸ்வதி] [தாளம்—ஆதி

மனம் கலங்குவதேன் தனியே எந்தன்
விளையாட்டு களிலும் நாட்டமின்றி எனது (மனம்)
முனைந்து எனதுடல் நலமேயடைய
பூஜைவினை புரிய புண்யமின்றி எனது (மனம்)
கள்ள வாழ்விலெனைத் தள்ள வரும்
சதிகாரரைக் கண்டவள் போல் நடுங்கி
உள்ள மதனில் வீணாசை காட்டும் பொய்
உலகப் பழக்க வழக்கங்களிலும் (மனம்) 2



மணிமேகலை

விளையாட்டில் ஏனோ மனமே
வீண் காலம் போக்காதே தினமே (விளை)
அறியாத செய்கை இதுவே மனிதர்
ஆடலுமே பாடலுமே புவிமேல் (விளை)
நலமான அந்தியுடனே
நாடிடுமே மாயிருளே அதுபோல்
நிலமேல் சுகத்தில் துயர் தான்—என்றும்
நிழல்போலக் கூடல்கண்டும் அந்தோ (விளை) 3

மணிமேகலை

கண்ணகி—உன்னை நான் காணும்
பாக்கியமிலேன் அன்னையே
வனிதாமணி நீ ஒரு தெய்வமென்றே
வானுலகும் புகழும் (கண்)
அல்லொடு பகலும் உனையே எண்ணி
அழல் மெழுகா மென்னுளம்
அச்சோ அச்சோ என்னே புகழ்வேன்
அறியது உன் பெருமையம்மா (கண்)
நின் கற்பை எண்ணி கண்ணீர் பெருக
நனையும் இம் மலர்கள்
ஆசை கொள்ளும் மணமல்லிகை மாலை
அணிவேன்—வந்தருளே மாலை (கண்) 4

மணிமேகலை

இராகம்—பந்துவராளி] [தாளம்—ஆதி

பல்லவி

நித்திரையிலும் பயமுண்டோ

அனுபல்லவி

ருத்திரன் கருணா ஸமுத்திர னன்றோ (நித்தி)

சரணம்

அத்தன் அசுத்த வைம்வபூத ஜடத்தை
யெரித்த மஹேஸ்வரன் சங்கானிங்கிருக்க (நித்தி) 5



மணிமேகலை

சொப்பனமோ இதென்ன விந்தை தெய்வ
சோதனையோ இனி என் செய்வேன்

எப்படி வந்தேன் இந்தத் தீவில்
எனக்கார் துணை தனி எங்கு செல்வேன்

அற்புத தெரிசனங் காண—என்ன
அருந்தவம் புரிந்தேனோ பேதை

அற்ப மெனை வலியவந்து—தடுத்தாண்டருள்
பெருமை இதோ

தாமத இருளும் மறைந்து உள்ளத்
தாமரையருளின் மலர்ந்து

தூய்மைபெற உன்னருள் வேண்டும்—என்றும்
நான் மறவேன் பிறவி வேண்டேன். 6

மணிமேகலை

கண்டேன் வானவர் காணா காட்சி
கருணை பொழியும் இருவிழியும் இளநகையும் (கண்)

கொண்டேன் ஆனந்தம் பிறவி பிணியொழிய
கோடி காலம் செய்த கொடுவினை யகலவும் (கண்)

சத்தியமுட னறமும் சாந்தவள நிறமும் தவழ நாற்புறமும்
சர்வ ஜீவ கருணாமூர்த்தியை ஜன்மம் கடைத்தேற கண்ணார
(கண்) 7

மணிமேகலை

ஆனந்தமே—யார்க்கும் கிடைக்குமோ
அக்ஷய பாத்ர மிதாருக்கும் சொந்தமே (ஆன)

பாவனமான பாத்ர மிதாகும்
பரமனின் னருளால் கிடைத்ததுமாகும்

பாரில் நம் பாக்யமே—பாரில் நம் பாக்யமே
பலித்தது சிலாக்யமே

பாவமெல்லாம் அரும்பத மெல்லாம் தரும்
அக்ஷய பாத்ரமிதாருக்கும் சொந்தமே (ஆன) 8



மாதவி

தேடியும் காணேன் வாடினேன் வருந்தி
செல்வக் குமாரியை மணிமேகலையை (தேடி)

வீடல்லதோர் கடை வீதியு மறியாள்
விந்தை ஐந்தாறேழு தினங்களாய் எங்கெங்கும் (தேடி)

அவள் பிரிவொருகணம் சகியேன் சென்றாள்
அறிவார் எவருமில்லை என் நெஞ்சம்

கவலையென் சொல்வேன் காரிருள் சூழும்
கானில் மயங்கினளோ என் செய்வேன் (தேடி) 9

அரவண அடிகள்

இராகம்—ஷண்முகப்பிரியா] [தாளம்—ஆதி

பல்லவி

பரவுமெய் அறம் நிறைந் தாழ்ந்து
பரந்தது தூய பௌத்த தர்மம் தேவரும்

அனுபல்லவி

பருவமதிலும் ஐம்புலனை வென்றவர்
பாவையர் நினைவு மனத்தும் அகன்றவர் (பரவு) 10

மணிமேகலை

இதில் பாவி ஏன்பிறந் தேனே
அவனி மீது—அன்பு இலாத
தாசி யென்பார்—தானிழிவாய் (பாவி)

காயம திங்கு தங்குவது மேது
இதோர் நாள் அழிவதாமே
மணிபணி பூண்கள் மனோன் மயக்காகுமே
மாயம் வேறிதிலே தான்—யாதிவை (பாவி)

ஆடவர் மனம் அடிமைகொள் பலவாம்
ஆடம்பரங்களைச் செய்வார்
ஆய்ந்திடில் யாவையும் அருளை அழிக்கும்
ஆரிருள் நரகத்தில் சேர்க்கும்



அருளாளன் பதநினைவை ஒழித்து விண்
அழகு செய்தகில மிதன் மேல்
ஆயுட் காலம் அழிய விடுவதேன்
அகற்று—இவற்றை—நீயே (பாவி) 11

மணிமேகலை

விருத்தம்—ராகம்—கேதாரகௌளம்

மாசின்றி குலமாதர் மனங்குளிரக்
கணவருடன் வாழ வேண்டின்
காசினியில் மானமுடல் காசுக்கு
விற்றுயிரைக் கார்க்கும் அற்ப
வேசியர்க ளிழிகுலமு மிழிதொழிலும்
வேரறவே வீழ வேண்டும்
ஈசனருட் படைப்பிலொரு ஜாதி இதற்கில்லை
உளதென் றுரைப்பார் வஞ்சர். 12

மணிமேகலை

பிக்ஷாந்தேகி—பிக்ஷாந்தேகி—பிக்ஷாந்தேகி
ஆதிரை என்ற அம்மையின் கையால் அமுதுவாங்
கென்ற புத்தர் ஆக்ஞை பிறந்தது. (பிக்ஷா) 13

மணிமேகலை

நமக்கினி ஏது சோகமே
நலிவிலாதே நாமிருப் போமே
நாட்டில் பஞ்சம் நாடிடா தாமே
நமக்காகவே நலமாயிப் பூமேல்
தண்ணருள் ஈசன் தந்ததுமாமே
கண்ணிமைபோல் காத்திடுவோமே
கணமேனும் பதமே மறவோம் (நம)
நிதம் ஹிதம் தரும் நிறை குணங்கள்
நோய் மாறுதே நாமெது வரை
தாமிருப்போமோ பாருமுதனம்
அதுவரை தானே ஈதாகும்
ஆய்ந்தறி வீரே அறிவோரே
ஆய்தறிவீரே அறிவோரே (நம) 14



மாதவி

புனிதபாக்ய மென்பாக்கியமே ஹா பாக்கியமே (புனித)
புண்ய மூர்த்தி புத்தபிரான்
அன்பினிலே பொங்கியதே (புனித)
இன்பமே நெஞ்சில் நல்கிடச் செய்தாள்
இளமை தனிலே துறவு கொண்டாள்

உதயகுமாரன்

இராகம்—பியாக்] [தாளம்—ஏகம்

வருவது வரட்டும் மனமோஹினி யென்
வச மாகாவிடில் உயிர் வாழேன் (வரு)
தனைமேல் சலியா மின்னலோ அன்னமோ
தளர்மென் நடையாள் என் உள்ளமே புகுந்தாள் (வரு

மணிமேகலை

இராகம்—தோடி] [தாளம்—ஆதி

சிறைச்சாலை இதென்ன செய்யும்
சரீராபிமானம் இலா ஞான தீரரை (சிறை)
பொறை—சாந்தமுடன் மனக்கண் எதிரே
இறைவன் விளையாடல் கண்டக மகிழ்வோரை (சிறை)
பூதமைந்துடன் ஏழுதாதுக்க ளெனுஞ் சுவர்
பொருந்திய உடலொரு சிறையென் றுணர்ந்தால் (சிறை)17

மணிமேகலை

விருத்தம்—ராகமாலிகை

கருணை நிறையும் நின்பொறைக் கித்தரா தேவியும்
வெட்குவள் நெஞ்சடங்கா தெழும் வெஞ்சினம் சூழ—வன்
நெஞ்ச மாபாதகன் வஞ்சி ஆள் ஆலவாய்
மாநகர் கால ருத்ரன் தழற் கண்ணீகர்
கற்பினல் சுட்டெரித்தாய் மஹாருந்ததீ
தேவி சாவித்ரியும் நின்றன் ஒப்பாவரோ
கற்பலங்காரி—எங்கள் குலத்தாவியே



கண்ணகித் தேவியே—பத்தினிப் பெண்களுக்குச்
சிறப்பைத் தரும் உத்தம தெய்வமாய்
வந்துதித்தாய்—எனக்குற்ற தாயே—எமைக்
காத்தருள் தேவி நீ—வாழி நீ—வாழியே. 18

அரவண அடிகள்

இராகம்—அமீர்கல்யாணி] [தாளம்—ஆதி

புகழோங்குக புவனமெங்கும்
புத்த தர்மம் தத்துவமாய் (புக)
பகவான் அரும் பகையறுத்தவன்
ஜக மாயை யற அவதரித்தவன் (புக)
எறும்பும் இறைவன் ஆலயம்
ஹிம்ஸை நினைவும் கொடிய பாவம்
அறமல்ல பலி கொலை
மறை பொருளல்ல வென்றருளும் புத்த
பிரானின் (புக) 19

மணிமேகலை

பாடிப் புகழ்வோம்—பரமன் பதமே
பாக்கிய மீதே பாரீர் (பாடி)
வருவீர் அய்யன் புகழே
புரிவோம்—துதிப்போம்—நிதமே (பாடி)
ஞான ஒளியதே வீசவே அக்ஞானம்
ஊனமடைந்ததாலே
கதிரும் வந்தது காணுதிருள் போல்
கவலையாவும் இராதே—இராதே—இராதே (பாடி) 20

மணிமேகலை

இராகம்—ஸ்ரீராகம்] [தாளம்—ஆதி

புத்தர் பிரானே நின் ஸத்வகுண
போதம் உலகெலாம் பரவுதல் வேண்டும் (புத்)
சித்தமல மகலவேண்டும்—சகல
ஜீவ ஹிம்ஸை நினைவும் ஒழிய வேண்டும் (புத்)



புவியில் பிறந்து அலுத்தேன்—ஒரு
புண்ய மின்றிக் காலம் கழித்தேன்—என்ன
தவமோ நின் திருவடி யடுத்தேன்—இனியொரு
தாய் வயிற்றில் பிறவாப் பேரின்பம் படைத்தேன் (புத்)

வாழி வாழி நின் மகிமைகொள் சங்கம்
மருவு மெய்யன்பர்க் குண்டோ களங்கம்
வாழி நின் பாவன நாமங்க ளெங்கும்
மங்கள மோங்குக என் நெஞ்சில் விளங்கும் (புத்) 21

காமிக் பாட்டுகள்

மாணிக்கம்—மாச்சோட்டான்

போனது பொழுது வா நீ எழுந்து போவோம் பட்டணமே
ஆனைமாதரி பெருத்ததினாலே
அவஸ்தை படுகுறேயே நட...நட... (போ)

இனி என்னாலே நடக்க காலே எடுக்க முடியாதே
தனியா என்னை கூட்டி வந்து தவிக்கவிக்காதே
உன்கூட (இ)

வந்தது எதுக்கு இந்திரன் திருநாள் முந்திதான் போகுமடா
எழுந்திரு மந்தியே வேகமட....நட...நட (இ)

கடையும் கடைத்தெருவும் சீனா கண்ணாடி பெட்டிகளும்
நடையும் உடைகுலுக்கு சின்ன நைஸான குட்டிகளும்
வடையுடன் தோசை அதிரஸம் போளி வாங்கி
தருகிறேன்டா
தொந்தி வயிர் வீங்க புடிக்கலாண்டா...நட...நட (போ)22

செட்டியார்—குஞ்சலம்

பத்தினிபோல் பசப்புறாய்........வீணாய்
எத்தனை தரம்தான் விளக்கி வைத்தாலும்
பித்தளை பொன்னுமா...சும்மா...... (ப)



இத்தனை கோபம் ஏனுமக்கே என்னை படைத்தான்
தன் விதிக்கே இந்த வீண் பழிக்கே

பத்தினிபோல் பசப்புறாய் வீணாய் சாவடி திரியும் தேவடியாள்
நீ சம்ஸாரி ஆவாயா...சீ...சீ

அன்ன காவடி எடுக்க பார்க்கிறாய் குறும்பை காட்டினால்
தெருவில் ஓட்டுவேன் சும்மா.... (ப)

தேவடியாளை கேவலமாய் திட்டுதல் பாவம் சேருமென்னாலே
தெரிவீர் இனிமேலே இதை...... (ப) 23

மாணிக்கம்—மாச்சோட்டான்

பொம்பளயாலே..........பயித்தியமே
புடிச்சதாலே
வம்பு நீதான் செய்திட வேண்டாம்
வாதனையானேன் ஆசை என்னை
வாட்டுவதாலே (பொ)

தண்ணி கொண்டு போனதை கண்டு
எண்ணி எண்ணி யேங்குறாய் மண்டு
புண்ணியம் நீ செய்தாலுண்டு புலம்பிட கண்டு
எனக்கு மனம் புரிகுவாய் தொண்டு (பொ)

ஆசை வெட்கம் அறியுமோ அனுபவந்தானே
தாசி நேசம் மோசமுமாமே
காசு நம்ம கெவறவம் போமே
மீசை யில்லா பேடியைபோல விசன படாதே
உடம்பை இன்னும் மெலிய விடாதே (பொ) 24

---



